[4th November 1958

### *Scholarships to Harijans and Backward Class students*

860 *Q.*—SRI V. K. KOTHANDARAMAN : கனம் பொது மராமத்து அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) ஹரிஜன மாணவர்கள், பின்தங்கிய வகுப்பு மாணவர்கள் இவர்களின் ஸ்காலர்ஷிப் நிதிக்காக முறையே எவ்வளவு தொகை 1956–57, 1957–58 ஆண்டுகளில் மத்திய அரசாங்கம் கொடுத்தது ?

(ஆ) அப்படிக் கொடுக்கப்பட்டத் தொகை மாணவர் சதவிகித அடிப்படையிலா, அல்லது அவர்கள் வாங்கும் மார்க்கு சத விகித அடிப்படையிலா ?

(இ) நம் மாகாண நிதியிலிருந்து கொடுக்கப்படும் ஸ்காலர்ஷிப் ஏழை மாணவர்கள் என்ற அடிப்படையிலா அல்லது மார்க்கு அடிப்படையிலா ?

THE HON. SRI P. KAKKAN :

| | 1956–57. RS. | 1957–58. RS. |
|---|---|---|
| (*a*) (1) Eligible communities (excluding the amount granted by the Govermnet of India direct to the students). | 1,69,900 | 2,57,400 |
| (2) Backward Classes (excluding the amount granted by the Government of India direct to the students .. .. .. .. | 2,50,000 | 5,50,000 |

(*b*) The sanction of allotment to the State Government by the Government of India depends upon the schemes approved by them in the annual plan and the availability of funds.

(*c*) The award of scholarship by the Harijan Welfare Department is based on both merit and poverty of the students. The income limit for the grant of scholarships is fixed at Rs. 1,500 per annum for post-matric courses and Rs. 1,200 for students studying in the elementary and secondary schools.

SRI V. K. KOTHANDARAMAN : சர்க்கார் ஏழைகளுக்கு கொடுக்காமல் மார்க் அடிப்படையில் ஸ்காலர்ஷிப் கொடுக்கிற காரணத்தினால், ஏழைகளுக்கு படிக்க வசதி இல்லாத காரணத்தினால் அதிகப்படியான மார்க்குகள் வாங்க முடியாத ஒரு நிலே இருப்பது சர்க்காருக்குத் தெரியுமா ? ஆகவே ஏழை என்கிற அடிப்படையில் கொடுப்பதற்கு சர்க்கார் முன்வருமா ?

THE HON. SRI P. KAKKAN : நான் சொன்ன பதிலில் கடைசியாக சொன்னது, ஏழ்மைத்தனத்தையும், மெரிட்டையும் பார்த்துத்தான் ஸ்காலர்ஷிப் கொடுக்கப்படும் என்று.

### *Loans for Weavers' Societies*

* 860-A *Q.*—SRI P. G. MANICKAM : கனம் மின்சார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

நெசவாளர் சங்கங்களுக்கு நடைமுறைக் கடன்கள் (working capital loans) வழங்குவதற்காக 1957–58, 1958–59 ஆகிய வருஷங்களிலே ஒவ்வொரு ஜில்லாவுக்கும் ஒதுக்கப்பட்டிருக்கும் தொகை எவ்வளவு ?

THE HON. SRI V. RAMAIAH : A statement [a] is placed on the table of the House.

[a] Printed as Appendix XI on page 599 infra.